# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சுபகிருது - ஆடி

2022 - ஜுலை



கோவிலூரில் நடைபெற்ற குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களின் நூற்றாண்டு விழா நிகழ்வு

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சுபகிருது – ஆடி

2022 – ஜுலை இதழ் – 121

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

சுண்ணவெண் சந்தனச் சாந்து சுடர்த்திங்கட் சூளா மணியும்

வண்ண உரிவை உடையும் வளரும் பவள நிறமும்

அண்ணல் அரண்முரண் ஏறும் அகலம் வளாய அரவும்

திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்

அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை

*– திருநாவுக்கரசர் தேவாரம்*

# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

நம்முடைய குருநாதர் தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகள் பதிப்புத் துறையில் வித்தகர். திருமதி ருக்மணி தேவி அருண்டேல் அவர்களின் உதவியாளராக அவர்கள் ஆரம்பித்த பதிப்பகத்தைச் சில ஆண்டுகளுக்குப் பின்னர் தன் முயற்சியால் தனதாக்கிக் கொண்டு கலாக்ஷேத்ரா பிரஸ் என்ற பெயரில் அருமையான தமிழ் ஆங்கில நூல்களை வெளியிட்டவர்கள். தமிழகத்தைப் பொருத்தமட்டில் சிறந்த ஆங்கில நூல்களை வெளியிட்டவர் என்ற புகழ் கொண்டவர். பரிசுகள் வென்றவர். மரியா மாண்டிஸோரி அம்மையாரின் நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கச் செய்து அவர்களுடைய சொற்பொழிவு வகுப்புகள் நடத்தியதைக் குறிப்பெடுத்து மொத்தம் 16 மாண்டிஸோரி நூல்களை ஆங்கிலத்தில் வெளியிட்டவர், பின்னர் மாண்டிஸோரி அம்மையார் பற்றித் தனிப்புத்தகம் வெளியிட்டவர்.

கோவிலூர் ஆதீனத்தின் தலைமைப் பொறுப்பேற்ற பின்னர் கோவிலூர் மடாலயம் என்ற பெயரில் சில ஆங்கில நூல்களையும் வேதாந்த நூல்களையும் வெளியிட்டவர். பின்னர் பெருமைக்குரிய தெய்வத்திரு. பேராசிரியர் சுப.அண்ணாமலை அவர்களின் தூண்டுதலின் காரணமாக பதினெண் கீழ்க்கணக்கு என்று அழைக்கப்படும் பத்துப்பாட்டு எட்டுத்தொகை ஆகிய சங்க இலக்கிய நூல்களை வெளிட்டவர். சங்க இலக்கிய நூல்களை மேனாள் குடியரசுத் தலைவர் திருமதி. அப்துல்கலாம் அவர்கள் திருக்கரங்களாலே வெளியிடச் செய்தவர்.

இப்படிப்பட்ட பதிப்புத் துறை மேதாவியான தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் சீடராகக் கோவிலூர் மடாலயத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்ட நான் நாச்சியப்ப சுவாமிகளின் நெறிமுறைகளை, நடைமுறைகளை முடிந்தவரை தவறுகள் நேராமல் கடைப்பிடிக்க வேண்டுமென்ற விருப்பத்தால் கலாக்ஷேத்ரா பதிப்பகம் கோவிலூர் மடாலயம் ஆகிய இரண்டின் வழியாக நம் கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள் 16ல் மீதமிருந்த நான்கு நூல்களையும் வெளியிட்டோம் (பகவத் கீதை, பஞ்சதசி, பிரம்ம கீதை, ஞானவாசிட்டம்) இலக்கிய நூல்களில் சங்க இலக்கியத்தைத் தொடர்ந்து சங்கம் நிறுவிய காலத்தில் எழுதப்பெற்ற ஐம்பெருங்காப்பியம் எனப்படும் சிலப்பதிகாரம்,

மணிமேகலை, சீவகசிந்தாமணி ஆகியவற்றை வெளிட்டுள்ளோம். மீதமுள்ள குண்டலகேசி, வளையாபதி ஆகியவற்றில் கிடைக்கப் பெற்ற பாடல்களை விரிவான பொருள் எழுதி, கதையையும் எழுதி வெளியிட வேண்டுமென்று விரும்புகிறோம். இவற்றை 2022க்குள் வெளியிட விரும்புகிறோம்.

நம் குருநாதர் பாதையைப் பின்பற்ற வேண்டுமென்ற சீரான எண்ணத்தாலும், நமக்குள்ள தமிழார்வம் காரணமாகவும் தொடர்ந்து பதினெண் கீழ்க்கணக்கு என்று அழைக்கப்படும் (திருக்குறள், நாலடியார், பழமொழி நானூறு, நான்மணிக்கடிகை, ஏலாதி இனியவை நாற்பது, இன்னா நாற்பது, சிறுபஞ்சமூலம், திரிகடுகம், ஆசாரக் கோவை, முதுமொழிக் காஞ்சி, கார் நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணை மொழி ஐம்பது, திணை மாலை 150, கைந்நிலை, களவழி நாற்பது) ஆகிய நூல்கள் ஆகும். இதிலே திருக்குறளும், நாலடியாரும் சிறப்பான உரையுடன் வெளியிட்டு விட்டோம். மீதமுள்ள 16 நூல்களும் உரை எழுதப்பட்டு வருகின்றன. இவற்றையும் இன்னும் ஓராண்டுக் காலத்திற்குள் வெளியிட விரும்புகிறோம். இவை நம்முடைய உணர்வுப்பூர்வமான சிந்தனை, விருப்பம். ஆனால் இன்றைய பதிப்புத்துறை நேர்மையற்ற வழிகளில் செல்பவர்கள் மட்டுமே லாபம் ஈட்டக்கூடியதாக இருக்கிறார்கள் என்பதால் வருந்துகிறேன். தமிழக நூலகத்துறை நூலகங்களுக்கு நூல்களை வாங்குவது சில பதிப்பகங்களுக்கு மட்டுமே ஏற்றதாக உள்ளது. மற்றைய பதிப்பகங்கள் நூலகத் துறைக்கு விற்பனை மிகவும் கடினமாக உள்ளது. மேலும் நூலகங்களிலிருந்து பணம் வருவதும் அதிககாலம் எடுக்கிறது. மிக உயர்ந்த செல்வாக்கு உள்ள பதிப்பகங்களைத் தவிர மற்றவர்கள் நூலகங்களுக்கு நூல்கள் விற்க முயற்சிப்பதே கடினம். பெரும்பாலும் இல்லை. நம்மைப் போன்ற பதிப்பகங்களை நூலகத்துறைக்கு மாதிரி கூட அனுப்புவதும் இல்லை. விண்ணப்பிப்பதும் இல்லை. ஒரே ஒரு முறை ஓலைச் சுவடிகளும் பாதுகாப்பும் வரலாறும் என்ற நூலுக்கு நூலகத்துறையிலிருந்து Order வந்தது. நூல்கள் அனுப்பினோம். நூலகத்துறை விதிக்கின்ற விலையும் குறைவு. பணம் வருவதும் ஏறக்குறைய 3 ஆண்டுகள் ஆகின. எனவே அதன் பின்னர் நூலகத்துறைக்கு நாம் நூல்களை விற்பனைக்காக விண்ணப்பம் செய்ததில்லை.

இந்தச் சூழ்நிலையில் நாம் வெளியிடும் இந்த நூல்கள் விற்றுத்

தீர்வதற்கு பல்லாண்டுகள் ஆகின்றன. 2006ஆம் ஆண்டு வெளியிடப் பெற்ற சங்க இலக்கியம் 2021ஆம் ஆண்டு தான் விற்றுத் தீர்ந்தது. சில நூல்களுக்கு மறுபதிப்புச் செய்துள்ளோம். நாச்சியப்ப சுவாமிகள் காலத்தில் அவர்கள் முதலீடு பற்றியோ 'விற்பனை பற்றியோ கவலைப்பட்டது இல்லை. உணர்வுப்பூர்வமாக நூல்களை வெளியிட்டார்கள்.

நம்மால் அவ்வாறு செய்யவோ, நூல்களை Stockல் வைத்திருந்தால் கரையான் பூச்சி இவற்றால் கேடு நேர்கிறது. தற்சமயம் மேற்கூறிய காரணங்களினால் பதிப்பகங்கள் மிகக் குறைவான எண்ணிக்கையிலே நூலைப் பதிப்பிக்கிறார்கள். 100, 200 என்று பதிப்பிக்கிறார்கள். செலவு அதிகமானால் கூடப் பணத் தேக்கம் இல்லை என்பதால் இந்த முறையே கடைப்பிடிக்கிறார்கள். இப்பொழுது அச்சகத் துறையும் அப்படி சிறு எண்ணிக்கை நூல்களை வெளியிடத் தயாராகி அதற்குரிய கருவிகளை வாங்குகிறார்கள். நாமும் ஐம்பெரும் காப்பிய நூல்கள் நாலடியார் ஆகியவற்றை 300 பிரதிகளே வெளியிட்டோம்.

நூல்கள் விற்பனை ஆவதிலே சிக்கல்கள் ஏற்படுவதால் அறிவுபூர்வமாக வியாபார ரீதியாக, சில பதிப்பகங்கள் தொழிலையே விட்டு விலகிச் சென்று விட்டன. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 100 ஆண்டுகளுக்கு மேல் பாரம்பரியம் கொண்டது; அதுவும் மூடப்பட்டுவிட்டது. நாம் நூல்களை வெளியிட்டு அவை விற்பதற்குக் காத்திருக்கும் காலம் அதிகமாகிறது. அல்லது இலவசமாக அளிக்க வேண்டியிருக்கிறது. நாம் நூல்களை முழுத் தர்மமாகச் செய்வதற்குப் பொருளாதார ரீதியாக இயலவில்லை. எனவே அறிவுப்பூர்வமாகவும் நடைமுறையில் இயலக் கூடிய காரியமாகவும் நூல்களை மிகக் குறைந்த அளவிலேயே வெளியிடுவது என்று தீர்மானித்துள்ளோம்.

பதிப்புத் துறை முறையாகச் செயல்படவில்லையென்றால் மக்களின் அறிவுத்திறன் மேம்படாது என்றாலும் மிக விருப்பமுள்ளவர்கள் மட்டுமே வாங்கிக் கொள்ளுமாறு குறைந்தளவு 100 பிரதிகளை ஒட்டி வெளியிடுவது என்று தீர்மானித்திருக்கிறோம்.

நிலைமை மேலும் மோசமாகச் செல்லாமல் இருக்கப் பரம்பெருள் அருள்புரிவாராக.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## 20. திருத்தஞ்சை மாமணிக் கோவில்

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் இருபதாவது திவ்ய தேசம், திருத்தஞ்சை மாமணிக் கோவில். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது இருபதாவது திவ்யதேசமாகும். தஞ்சை நகரைத் தாண்டியதும் அமைந்துள்ள வெண்ணாற்றங்கரை மீது இத்திவ்யதேசம் அமைந்துள்ளது.

கிரேதாயுகத்தில் மது என்னும் அரசனது மரபில் தஞ்சகன், தண்டகன், கஜமுகன் என்னும் மூன்று அசுரர்கள் இருந்தனர். அம்மூவரும் செருக்குற்று இந்திரலோகத்தை அச்சுறுத்தியும், முனிவர்களின் தவத்தைச் சிதைத்தும் பல கொடுமைகளைச் செய்துவந்தனர். அப்போது பராசுரர் என்னும் முனிவர், இவ்விடத்தில் தவம் செய்து வந்தார். அவ்வசுரர்கள் அவரையும் துன்புறுத்தினர். அம்முனிவர் துன்பம் தாளாமல் ஹரி, ஹரி என்று எம்பெருமானை அழைக்கலானார். பக்தர்களுக்கு இரங்கும் பரந்தாமன், கருடனை அனுப்பி, அம்மூவருக்கும் துணையாக வந்த மற்ற அரக்கர்களையெல்லாம் அழித்துவிட, அம்மூவர் மட்டும் எஞ்சி நின்றனர்.

இந்நிலை கண்டு எம்பெருமான் தானே நேரில் வந்து தஞ்சகன் என்னும் அரக்கனது தலையை, தனது சக்ராயுதத்தால் சீவினார். தவறுணர்ந்த தஞ்சகன், தன்னை மன்னிக்குமாறு வேண்டி, தன் பெயரிலேயே இந்நகரம் திகழ வேண்டும் என்று கேட்டுக்கொண்டான். அதனால் இந்நகரம் தஞ்சகனூர் என்று பெயர் பெற்று, பின் தஞ்சகூராகி, தஞ்சாவூர் ஆயிற்று.

இவ்வாறு தஞ்சகன் என்ற அரக்கன் அழிந்த பின், கஜமுகன் என்ற அரக்கன் யானை வடிவம் கொண்டு, திருமாலைத் தாக்கினான். திருமாலோ நரசிம்ம அவதாரம் எடுத்து அவனைக் கொல்லுகின்ற தருவாயில், தனக்குத் திருநாடு வேண்டுமெனக் கஜமுகன் கேட்க, அவனுக்கும் திருநாடு அருளினார். அத்திருநாடே தஞ்சையாளி ஆகும். தஞ்சையில் யாளியாகிய நரசிம்மரூபத்தில், பொருள் நின்றதால், இத்திருநாடு தஞ்சையாளி எனப் பெயர் பெற்றது.

இவ்வாறு, இரண்டு சகோதரர்களும் மாண்டுவிட்டதைக் கண்ட தண்டகாசுரன், பாதாளத்திற்குள் புகுந்து மறைந்து கொண்டான். திருமால் வராக உருவம் கொண்டு, பூமியைக் கண்டு, அவனைப் பின் தொடர்ந்து சென்று, தன் முகக் கோட்டால், அவனது தலையைக் கிழித்து எறிந்தார். தனது இறுதிக்காலம் நெருங்கி விட்டதை அறிந்த தண்டகாசுரன், எம்பெருமான் பாதங்களில் வீழந்து, இவ்விடம் தன் பெயரால் வழங்கப்பட வேண்டும் என வேண்டினான். அன்று முதல், அவ்வனம் தண்டகாரண்யம் ஆயிற்று. அதன் நடுவே ஸ்ரீமுஷ்ணம் என்னும் திவ்ய தேசத்தில், நிலத்திலிருந்து எழுந்த வண்ணம், ஸ்ரீபூவராகப் பெருமாள் சுயம்பு வடிவாய்க் காட்சி தந்தருளினார்.

இத்திவ்ய தேசத்தில் வெண்ணாற்றங்கரையில் அருகருகே அமைந்துள்ள தஞ்சைமாமணிக் கோயில், மணிக்குன்றம், தஞ்சையாளிநகர் என்ற மூன்று தலங்கள் அடங்கியுள்ளன. இத்தலங்களில் முறையே நீலமேகப் பெருமாளும், மணிக்குன்றப் பெருமாளும், நரசிம்மப் பெருமாளும் எழுந்தருளியுள்ளனர். இவ்வாறு மூன்று தலங்கள் இருந்தாலும், அவை மூன்றும் இணைந்த ஒரு திவ்யதேசமாகவே மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது. இத்திவ்யதேசம் திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பூதத்தாழ்வார் ஆகிய மூன்று ஆழ்வார்களால் மங்களாசாசனம் பாடப்பெற்ற தேசமாகும்.

இத்திவ்ய தேசத்தில் உள்ள முதல் தலமான தஞ்சை மாமணிக் கோயிலில் உள்ள

மூலவர் : நீலமேகப் பெருமாள்

தாயார் : செங்கமலவல்லி

தீர்த்தம் : கன்னிகா புஷ்கரணி, வெண்ணாறு

விமானம் : சௌந்தர்ய விமானம்

கோலம் : கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம்

இத்திவ்யதேசத்தில் உள்ள இரண்டாவது தலமான மணிக்குன்றத்தில் உள்ள

மூலவர் : மணிக்குன்றப் பெருமாள்

தாயார் : அம்புஜவல்லி

தீர்த்தம் : ஸ்ரீராம தீர்த்தம்
விமானம் : மணிக்கூட விமானம்
கோலம் : கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம்

இத்திவ்யதேசத்தில் உள்ள மூன்றாவது தலமான தஞ்சையாளி நகரில் உள்ள
மூலவர் : நரசிம்மப்பெருமாள் என்னும் ஸ்ரீ வீரசிங்கப்பெருமாள்
தாயார் : தஞ்சைநாயகி
தீர்த்தம் : சூர்யபுஷ்கரணி
விமானம் : வேதசுந்தர விமானம்
கோலம் : கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம்

இந்த மூன்று ஆலயங்களிலுமே உற்சவர் ஸ்ரீ நாராயணன் என்ற திருநாமத்தோடு திகழ்கிறார். சிங்கப்பெருமாள் கோயில் வீரநரசிம்மர், முன் மண்டபத்தில் யோக நரசிம்மர், நீலமேகப் பெருமாள் கோயிலின் பிரகாரத்தில் லட்சுமி நரசிம்மர், கருடாழ்வார் விமானத்தில் அபயவரத நரசிம்மர், தாயார் சன்னதியில் உள்ள தூணில் கம்பத்தடி யோக நரசிம்மர் என இத்தலத்தில் பஞ்சநரசிம்மர்கள் காட்சி தருகின்றனர். வீரநரசிம்மர் கோயிலில், சக்கரத்தில் மஹாவிஷ்ணுவே சக்கரத்தாழ்வாராக இருக்கிறார்.

இத்திவ்ய தேசத்தில், இவை எல்லாவற்றிற்கும் மேலாக, வைகாசி மாதத் திருவோண நாளில் நடைபெறும் 23 ஆலய கருடசேவை தனிச்சிறப்புப் பெற்றதாகும். கருடசேவைக்கு முதல் நாள், பகல் 12 மணிக்கு வெண்ணாற்றங்கரை ஸ்ரீ நரசிம்மப் பெருமாள் சந்நிதியில் திவ்யதேசப் பெருமாள்களுக்கு மங்களாசாசனம் நடைபெறுகிறது. திருவோண நாளன்று, காலை 6 மணிக்கு, கருடவாகனங்கள் புறப்பட்டு 11 மணிவரை திருவீதியுலா வருகின்றன. திருவீதியுலாவில், இத்தலத்தை மங்களாசாசனம் செய்த திருமங்கையாழ்வார், ஹம்ச வாகனத்தில் முதலில் சேவார்த்திகளோடு எழுந்தருள்கிறார். அவரைத் தொடர்ந்து, ஸ்ரீநீலமேகப் பெருமாள் ஆண்டாள் நாச்சியார் சமேதரராக கருட வாகனத்தில் எழுந்தருள்கிறார்.

அடுத்து, ஸ்ரீ லட்சுமி சமேத நீலமேகப்பெருமாள், ஸ்ரீ வீரநரசிம்மப் பெருமாள், ஸ்ரீ மணிக்குன்றப் பெருமாள், வேலூர் ஸ்ரீ வரதராஜப்

பெருமாள், ஸ்ரீ கல்யாண வெங்கடேசப் பெருமாள், கரந்தை ஸ்ரீ யாதவக் கண்ணன் பெருமாள், கொண்டிராஜ பாளையம் ஸ்ரீ கோதண்டராமர், ஸ்ரீ வரதராஜப் பெருமாள், வெண்ணாற்றங்கரை ஸ்ரீ கல்யாண வெங்கடேசப் பெருமாள், கீழராஜ வீதி ஸ்ரீ வரதராஜப் பெருமாள், தெற்கு வீதி ஸ்ரீ கலியுக வெங்கடேசப் பெருமாள், அய்யன்கடைத் தெரு ஸ்ரீ ராமசுவாமிப் பெருமாள், கோட்டை ஸ்ரீ பிரசன்ன வெங்கடேசப் பெருமாள், மேலஅலங்கம் ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாள், மேலராஜவீதி ஸ்ரீவிஜயராமப் பெருமாள், சடநாயக்கன் தெரு ஸ்ரீநவநீத கிருஷ்ண ஸ்வாமி, மானாம்புச்சாவடி ஸ்ரீபூலோக கிருஷ்ண ஸ்வாமி, பள்ளி அக்ரஹாரம் ஸ்ரீபிரசன்ன வெங்கடேசப் பெருமாள், பள்ளி அக்ரஹாரம் ஸ்ரீ கோதண்டராம ஸ்வாமி, சுங்கம் திடல் ஸ்ரீலட்சுமி நாராயணப் பெருமாள், கரந்தை வாணியர் தெரு ஸ்ரீவெங்கடேசப் பெருமாள் ஆகிய 23 ஆலயங்களின் கருடவாகனங்கள் வரிசையாக ஒன்றன் பின் ஒன்றாய்ப் பவனி வருகின்றன.

வெண்ணாற்றங்கரையிலிருந்து புறப்படும் இந்தக் கருட வாகனங்கள், மாட்டு வண்டிகளில் வைத்து இழுக்கப்பட்டு, தஞ்சையின் நான்கு வீதிகளை வலம் வருகின்றன. இதற்கு அடுத்த நாள் நவநீத சேவையும், இறுதியாக விடாயாற்றி உற்சவமும் நடைபெற்று, நெஞ்சைக் கொள்ளை கொள்ளும் கருடசேவை உற்சவம் இனிதாக நிறைவு பெறுகின்றது.

என் அய்யா, காப்பியக்கவிஞர், நற்றமிழ்நாவலர் கவிஞர் கோ.நா. மீனவனார் திருத்தஞ்சை மாமணிக் கோயில் குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. தஞ்சையைப் பார்த்த வண்ணம், எம்பெருமான் இருத்தலால், தஞ்சையைக் காத்தருளும் தெய்வமான எம்பெருமான் தஞ்சை மாமணி என்று போற்றப்படுகிறார். பெருமாள் இங்கு எழுந்தருளியதும், குபேரன் விஸ்வகர்மாவை அழைத்து, இங்கு ஒரு நகரை நிர்மாணம் பண்ணச் சொன்னார். தேவசிற்பியான விஸ்வகர்மாவும் கருடன் பறப்பது போல் இந்நகரைச் சிருஷ்டித்தார். அதனால் இந்நகரில் கருடனின் சக்தி அதிகம் இருப்பதாகவும், கருடன் எந்நேரமும் பறந்து கொண்டே இந்நகரத்தைக் காப்பதாகவும் நம்பப்படுகின்றது. அதனால் இந்நகர் கருடபுரி என்றும் அழைக்கப்படுகின்றது.

தஞ்சைமாமணிப் பெருமாள், மணிக்குன்றப் பெருமாள், நரசிம்மப் பெருமாள் ஆகியோர் அருள்புரியும் நகரான கருடபுரி, தஞ்சமென்று வந்தாரைத் தாங்குகின்ற தேசமாகும். இத்திவ்ய தேசத்தின் ஒரு தலமான தஞ்சையாளிநகரில், தஞ்சைநாயகிக்கு மணவாளன் ஆனவனை, போரில் இராவணனை வென்றவனை வணங்கச் சொல்லும் முதல் பாடல் :

*தஞ்சைமா மணிக்குன்றம் தனிலமர்ந்த நரசிம்மன்*
*தஞ்சமென வந்தாரைத் தாங்குகிற கருடபுரி*
*வஞ்சிதஞ்சை நாயகிக்கு வாய்த்திட்ட மணவாளன்*
*வெஞ்சமரில் இராவணனை வென்றானை வணங்குமினே.*

2. எம்பிரான் என்று எல்லோராலும் வணங்கப்படும் எம்பெருமான், தன்னுடைய அம்பினால், அரக்கர்களின் போர்க்குணத்தையும் வலிமையையும் தகர்த்த பிரான் ஆவார். அவர் மணம் பரப்பும் சோலைகள் நிறைந்த தஞ்சையாளிநகரில் தஞ்சை நாயகியுடன் தம்பதி சமேதரராய் அருள் புரிகின்றார். அவரின் பாத மலர்களை வணங்கச் சொல்லும் இரண்டாம் பாடல் :

*அம்பினால் அரக்கர்கள்தம் அடல்வலியைத் தகர்த்தபிரான்*
*எம்பிரான் என்றிங்கே எல்லோரும் தொழுதேத்தும்*
*வம்புலாம் சோலை வளர்தஞ்சை யாளிநகர்*
*தம்பதியாய்க் கொண்டவன்தன் தாள்மலரை வணங்கிடுமே*

3. பெரிய மதில்கள் சூழ்ந்த தஞ்சை மாமணிக் கோவிலில் உள்ளவனின் பூமலர்கள் போல் மலர்ந்த விழிகள் கொண்டவனின், ஏழுலகங்களும் அதிரும் வண்ணம் தேர் செலுத்தும் வல்லமை கொண்டவனின், நீலமேகம் என விருப்பமுடன் அமர்ந்தவனின் பாதங்களை வணங்கி உய்யச் சொல்லும் மூன்றாம் பாடல் :

*மாமதில்கள் சூழ்தஞ்சை மாமணிக் கோவில்உளான்*
*பூமலர்கள் போல்மலர்ந்த பொன்விழியான் ஏழுலகும்*
*தாமதிரத் தேர்செலுத்தித் தனிநீல மேகமெனக்*
*காமுற்றுச் சென்றமர்ந்தான் கழல்வணங்கி உய்யுமினே*

4. மலர்ப்பொய்கைகள் நிரம்பிய தஞ்சை மாமணிக் கோயில் என்னும் தலமும், மணிக்குன்றம் என்னும் தலமும், தஞ்சையாளி நகர் என்னும் தலமும் இருக்கின்ற இத்திவ்ய தேசத்தில் செங்கமலவல்லித் தாயாருக்கு

நாயகனாய் வீற்றிருக்கும் நீலமேக நேசனை வணங்கச் சொல்லும் நான்காம் பாடல் :

*மலர்ப்பொய்கை மாமணியும் மணிக்குன்றம் எனும்பதியும்*
*வலத்தஞ்சை யாளியுடன் வளர்நாகை இருந்தருளும்*
*வலத்தாழி செங்கமல வல்லிக்கு நாயகனாய்*
*நிலம்பரவ வீற்றிருக்கும் நேசனையாம் வணங்குதுமே*

5. நாகர்களுடன் சேர்ந்து சோழமன்னர்கள் திருப்பணி செய்து அமைத்த கோயிலில் உறைந்திருக்கின்ற திருவடிகள், எப்பொழுதும் இன்பம் தரக்கூடியவை எனக் கண்டுகொண்டு, அத்திருவடிகளைத் தாமரை மலர் கொண்டு தூவிக் கும்பிட்டுப் போற்றச் சொல்லும் ஐந்தாம் பாடல் :

*நாகருடன் சோழமன்னர் நற்பணியால் தானமைத்த*
*ஆகமஞ்சேர் நற்கோயில் அகமிருப்பான் திருவடிகள்*
*போகங்கள் தரநாளும் பொலிகின்ற திறம்கண்டு*
*கோகனக மலர்தூவிக் கும்பிட்டுப் போற்றுதுமே*

அடியார்களே! எனக்குச் சமயத்தில் கை கொடுப்பவனும், தகப்பனும், எனது எல்லா உறவுகளும், என் தலைவனும், என் உயிரும், பாணங்களால் அரக்கர்கள் அஞ்சும்படி அவர்கள் உயிரை முடித்த என் இறைவனும் ஆகிய எம்பெருமான், மணம் வீசும் நந்தவனத்தையும், பெரிய மதில் சுவரையும் கொண்ட தஞ்சை மாமணிக் கோவிலில் எந்நாளும் உறைந்திருக்கின்றான். எம்பெருமானின் நாமமாகிய நாராயணா என்னும் நாமம் நான் கடைத்தேறக் கண்டு கொண்ட நாமம் என்று கண்டுகொண்ட திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

*எம்பிரான், எந்தை, என்னுடைச் சுற்றம், எனக்கு அரசு,*
*என்னுடை வாழ்நாள்*
*அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி அவருயிர்*
*செகுத்த எம் அண்ணல்*
*வம்புலாஞ் சோலை மாமதில் தஞ்சை மாமணிக் கோயிலே*
*வணங்கி*
*நம்பிகாள்! உய்ய நான் கண்டு கொண்டேன் நாராயணா*
*என்னும் நாமம்.*

*(தொடரும்...)*

## சைவநெறிக் காவலர்
## கண்ணதாசன்
## (இல.பழனியப்பன்)

இன்று பிறந்த குழந்தை முதல் குடுகுடு கிழவர் வரை அனைவரும் கண்ணதாசன் இரசிகர்களே. அதில் எள்ளவும் அய்யமில்லை.

அதற்குக் காரணம் நாம் சற்று ஆழ்ந்து சிந்தித்தால் மட்டுமே புரியும். அவரது திரைப்படப் பாடல்களுக்காகக் கூடிய கூட்டமாகத் தோன்றினாலும் அவருடைய இறைநிலை உணர்வு எளிய தத்துவங்களை முன்னிறுத்தியே.

செட்டிநாட்டில் சிறுகூடல்பட்டி எனும் சிறிய கிராமம் இன்று அவராலே உலகப் புகழோடு உலா வந்து கொண்டிருக்கிறது.

அவரது குடும்பம் சைவநெறியின் பின்னணியில் அமைந்த ஆன்மீகக் குடும்பம்; அவரது தந்தை, அய்யா (தாத்தா) ஆகியோரின் நிழற்படங்களைப் பார்த்தால் இது தெரிய வரும்.

அவர் சிலகாலம் அரசியல் ஈடுபாடு காரணமாக இவற்றில் கவனம் செலுத்தாமல் இருந்திருக்கலாம். ஆனால் அதற்கும் சேர்த்து அவர் பிற்காலத்தில் ஆற்றிய இறை உணர்வுப் பணியை யாரும் மறக்க முடியாது. இயக்குனர் ஏ.பி. நாகராஜன் தயாரித்த தெய்வீகத் திரைப்படங்கள் சரஸ்வதி சபதம், திருவருட்செல்வர், திருவிளையாடல் போன்ற பல படங்களில் அமைந்துள்ள அவரது பாடல்களை முணுமுணுக்காத வாயே இல்லை எனலாம். சித்தமெல்லலாம் சிவமயமாகக் கொண்ட நகரத்தார் குல நாயகன் நம்மை, சைவநெறித் தலைவன் சிவபெருமானிடம் அழைத்துச் செல்லும் பாங்கு மிகமிக அற்புதமானது.

சமூகப் படங்களிலும் அவர் இவற்றைத் தாராளமாகவே பயன்படுத்தி உள்ளார்.

*தாய் தந்த பிச்சையிலே பிறந்தேன் அம்மா*

*நீ தந்த பிச்சையிலே வளர்ந்தேன் அம்மா*

என்ற வைர வரிகள் மனிதப் பிறப்புக்குத் தாயை இறைவன் எப்படி ஒரு கருவியாக்கி உள்ளான் என்பதை அறிய முடிகிறது.

வாழ்வின் நிலையாமையைப் படம் பிடித்துக் காட்ட

*பார்த்தா பசு மரம் படுத்துவிட்டா நெடுமரம்*

*சேர்த்தா விறகுக்கு ஆகுமா ஞானத்தங்கமே*

என்ற வரிகள் எந்த நேரமும் இறுதி நாள் வரும் எப்படியும் வரும் என்பதை நினைவூட்டிக் கொண்டே இருக்கின்றன.

கண்ணன் அவருக்கு வழிபடு தெய்வம்; ஆனால் அனைத்துத் தெய்வங்களும் அவருக்குக் குல தெய்வங்களே; சாதி மத வேறுபாடு கடந்த சைவநெறியின் தொண்டர் கண்ணதாசனே என்பதற்கு இதை விட வேறு சான்று வேண்டுமா என்ன. அவருடைய கொள்ளுப் பாட்டன் கணியன் பூங்குன்றன் தானே! அதன் தாக்கமே இவரது எதிரொலிப்பு.

*ஒரு தாய் மக்கள் நாம் என்போம்*

*ஒன்றே நமது குலம் என்போம்* என்று சைவநெறியின் சன்மார்க்க நெறியை இளம் பிள்ளைகளின் மனத்திலே புகுத்துகிறார்.

ஏசு காவியம் என்ற ஒரு அற்புதப் படைப்பை அவர் ஆக்கியுள்ளார். திருச்சி தலைக்காவிரி வெளியீடான அந்தப் படைப்பு உலக மக்கள் அனைவரையும் திகைக்க வைக்கிறது. சமரச சன்மார்க்க நெறியின் காவலன் ஏசுநாதர் என்பதை அறிவு பூர்வமாக நிறுவியுள்ளார். சைவ நெறியின் உயரிய கோட்பாடான

*எல்லோரும் எல்லாமும் பெற வேண்டும்*

*இங்கு இல்லாமை இல்லாத நிலை வேண்டும்*

இயல்பாகவே இரக்க குணம் கொண்ட கண்ணதாசன் இப்படிக் கூறியிருப்பது வியப்பில்லையே.

நிலையாமையை உணர்வது தான் ஏழ்மை நிலை; அப்போது தான் மற்றவர்களுக்கு உதவ வேண்டும் என்ற பெருந்தன்மை மலரும்; கடைசி வரை நான் ஏழையாகவே வாழ விரும்புகிறேன் என்பதே அவர் மனித குலத்திற்கு வழங்கிய பாடம். வசதி வந்தாலும் மனதால் ஏழையாக வாழ வேண்டும் என்ற பாரதியாரின் கொள்கையே அவரது கொள்கை. அவ்வாறே கடைசி வரை வாழ்ந்து சாதனை படைத்த செம்மல் பள்ளியில் கற்றது குறைவு; அனுபவம் தந்ததே அதிகம்.

*கடவுள் இருக்கின்றான் அது உன் கண்ணுக்குத் தெரிகிறதா*

*காற்றில் மிதக்கின்றாய் அது கண்ணுக்குத் தெரிகிறதா*

*இருட்டில் நடக்கின்றாய் அது கண்ணுக்குப் புரிகிறதா*

இந்தத் திரைப்படப் பாடல் மூலம் மிகப்பெரிய உலகளாவிய ஆன்மீக உண்மையை மனித குலத்திற்குப் புரிய வைக்கிறார். இயல்பிலேயே கண்ணதாசனுக்குத் தெய்வத்தின் ஆசியும் அருளும் இருக்கிறது என்பதையே இது காட்டுகிறது.

எந்நாட்டிற்கும் இறைவனான சிவனைத் தென்னாடு தந்தது என்பதே சைவநெறிக்குச் சிறப்புப் பெருமை. அதை மற்ற சமயத்தினர் உணர வைக்கத் தன் கவிதை, திரைப் பாடல்கள் மூலம் கண்ணதாசன் வெளிப்படுத்தத் தவறவில்லை. நபிகள் நாயகத்தின் தத்துவத்தை,

*கருப்பிலே வெளுப்பும் இல்லை*
*கடலுக்குள் பேதம் இல்லை*

என்ற பாடல் மூலம் சொல்லி ஒரே இறைவனான அல்லாவை எல்லோரும் தொழ வேண்டும் என்ற பரந்த மனப்பான்மை சைவநெறி தந்த தாக்கம் தானே.

போனால் போகட்டும் போடா என்ற திரைப்படப் பாடலில் நிலையாமையையே முக்கியமாக வலியுறுத்தும் கவியரசரர் எதற்கெல்லாமோ மருந்து கண்ட மனித இனத்தால் இறப்பைத் தள்ளிப் போட மட்டுமே முடிந்தது ஒழிய நிரந்தரமாகத் தடுக்க முடிந்ததா என்ற ஆன்மீக அறிவியல் கேள்வியையும் முன் வைக்கிறார். அவர் கேட்ட கேள்விக்கு அறிவியல் உலகம் இன்றளவும் பதில் கூற முடியவில்லை. இதைத் தான் அறிஞர் ஏ.பி.ஜே. ஆப்துல் கலாம் அறிவியலில் வெற்றி பெற ஆன்மீகமே தேவை எனக் கூறியுள்ளார்.

தான் சொல்வதே கவிதை, தான் எழுதுவதே தமிழ் என்ற நோக்கோடு செயல்படாமல் பன்மொழிப் புலவர் கா.அப்பாதுரையாரிடம் முறையாகத் தமிழ் கற்றவர் கண்ணதாசன். அவர் கற்ற இலக்கிய அறிவு நூறு புலவர் கற்ற அறிவுக்குச் சமம் என்று மார்தட்டிச் சொல்லலாம். கற்றலில் கேட்டல் என்பது அதை உள் வாங்கிக் கொள்ளும் ஆற்றல் ஆகும். எதையும் உடனடியாக உள் வாங்கிக் கொள்ளும் கற்பூர புத்தி அவரது அறிவு. கடுமையான உடல் நலப் பாதிப்பு ஏற்பட்ட போதும் தனது இறைநெறிக் கோட்பாட்டை இறுதி வரை செயலாற்றியே வந்தார்.

கிருபானந்தவாரியாரிடமும் காஞ்சிப் பெரியவர் சந்திரசேகர சுவாமிகளிடமும் மிகுந்த ஈடுபாடு உள்ளவர். இந்த இரு ஆன்மீகக் கடலின் ஆசீர்வாதம் நமது கவியரசருக்குக் கிடைத்த மிகப்பெரிய அமுதமாகும். மது விலக்கு அமுல்படுத்தாததால் நாம் பல அறிஞர்கள், கலைஞர், மகான்கள் ஆகியோரை இழந்திருக்கிறோம். இதன் காரணமாக உலகப் புகழ் பெற்ற கவியரசர் கண்ணதாசனை மிகச்சாதாரண வயதான 54ல் இழந்து விட்டோம். இந்த மதுவின் கொடுமை இன்னும் எத்தனை பேரை வாட்டி வதைக்கப் போகிறதோ தெரியவில்லை.

கவியரசர் மதுவின் பாதிப்பை மனதில் வைத்து

***ஆண்டவனே நீ இருந்தால் சொல்லு***
***அறிவையெல்லாம் மயக்குதடா கள்ளு***
***மாண்டவனும் குடிச்சவனும் ஒன்னு***
***மண்டையிலே ஏறலையே இன்னும்***
***நல்ல புத்தி வருவதில்லை குடியிலே***
***ஒரு நாய் கூட மதிப்பதில்லை தெருவிலே***

என்று விரக்தியோடு தன் இதயத்தைத் திறந்து பாடியுள்ளமை நம்மை உருக வைக்கிறது அல்லவா.

கவிஞர்களை ஊக்குவிப்பதில் அவரைப் போல ஒருவரைக் காண்பது அரிது. பாவேந்தர் பாரதிதாசன் தோற்றுவித்த தமிழ்க் கவிஞர் மன்றத்தின் தலைவராக இருந்து சீரிய பணியாற்றி உள்ளார். அவருடன் படித்த நண்பர் கவிஞர் சாமிபழனியப்பனை ஒருமுறை எதிர்பாரத விதமாகக் கோடம்பாக்கத்தில் சந்தித்தார். அதன் நினைவாகவும் பழனியாண்டவர் நினைவாகவும் அன்று தான் எழுதிய திரைப்படப் பாடலுக்கு

***கோடம்பாக்கம் குடியிருக்கும் பழனியப்பா***
***என் கோரிக்கையை கொஞ்சம் கவனியப்பா***

என்று அமைத்தார். மொத்தத்தில் வள்ளுவர் போலவும், நால்வரைப் போலவும், கம்பரைப் போலவும், இளங்கோ போலவும் ஒருங்கிணைந்த ஒரு அற்புதக் காவலர் நம் சைவநெறி வழி வந்த கவியரசர்.

கவியரசர் புகழ்பாடிச் சைவ நெறி காப்போம்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### அரண்

(பாதுகாப்பு நிறைந்த கோட்டை)

**1. ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்**
**போற்று பவர்க்கும் பொருள்.**

ஆற்றுபவர்க்கும் - வலிமையால் போர்ச் செயலாற்றுபவர்க்கும்; அரண் பொருள் - அரண் ஒரு பொருட்டாகும்; அஞ்சி - பிறர் போர் செய்ய வரும் போது அச்சம் கொண்டு; தற்போற்றுபவர்க்கும் - தன்னைச் சார்ந்து வருபவர்க்கும்; பொருள் - அரண் ஒரு பொருட்டாகும்.

வலிமையால் போர்ச் செயல் ஆற்றுபவர்க்கும் அரண் ஒரு பொருட்டாகும். பிறர் போர் செய்ய வரும் போது அச்சம் கொண்டு தன்னைச் சார்ந்து வருபவர்க்கும் அரண் ஒரு பொருட்டாகும்.

அரண் மன்னனுக்கும் மன்னனைச் சார்வோருக்கும் பாதுகாப்பினைத் தரும் ஒன்றாகும்.

**2. மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்**
**காடும் உடையது அரண்.**

மணி நீரும் - மணி போன்ற தெளிந்த நீரும்; மண்ணும் - மணல் பரப்பும்; மலையும் - மலைகளின் தொடர்ச்சியும்; அணிநிழற் காடும் - அழகிய நிழலைத் தரும் மரங்கள் அடர்ந்த காடும்; உடையது அரண் - உடையது தான் அரண்.

மணி போன்ற தெளிந்த நீரும் மணல் பரப்பும் மலைகளின் தொடர்ச்சியும் அழகிய நிழலைத் தரும் மரங்கள் அடர்ந்த காடும் உடையது தான் அரண் ஆகும்.

நீராலும் மணல் பரப்பாலும் மலைகளின் தொடர்ச்சியாலும் நெருங்கிய காட்டினாலும் அமைந்து நாட்டைக் காப்பதே அரண் ஆகும். இதனை நீர் அரண், மணல் அரண், அலை அரண், காட்டரண் என வகைப்படுத்துவர்.

**3. உயர்வு அகலம் திண்மை அருமை இந்நான்கின்**
**அமைவு அரண் என்று உரைக்கும் நூல்.**

உயர்வு - உயர்ச்சி; அகலம் - அகன்ற தன்மை; திண்மை - வலிமை; அருமை - பகைவர் அணுக இயலாத அரிய தன்மை; இந்நான்கின் - இந்த நான்கினது; அமைவு - பொருத்தத்தை உடையது; அரண் என்று உரைக்கும் நூல் - அரண் ஆகும் என்று நூலோர் உரைப்பர்.

உயர்ச்சியும் அகன்ற தன்மையும் வலிமையும் பகைவர் அணுக இயலாத அரிய தன்மையும் என்ற இந்த நான்கினது பொருத்தத்தை உடையது அரண் ஆகும் என்று நூலோர் உரைப்பர்.

உயரம், அகலம், வலிமை, அருமை ஆகியவை பொருந்தியது தான் அரண் என்று கலைவல்லுநர் உரைப்பர்.

**4. சிறுகாப்பின் பேர்இடத்தது ஆகி உறுபகை
ஊக்கம் அழிப்பது அரண்.**

சிறு காப்பின் - சிறிய காவலைத் தருவதாய்; பேர் இடத்தது ஆகி - பெரிய இடத்தை உடையதாய்; உறுபகை - தன்மேல் உற்ற பகைவரின்; ஊக்கம் - மன எழுச்சியை; அழிப்பது அரண் - அழிப்பது தான் அரண் ஆகும்.

சிறிய அளவே காவல் தருவதானாலும் பெரிய இடத்தை உடையதாய்த் தன்மேல் உற்ற பகைவரின் மன எழுச்சியை அழிப்பது தான் அரணாகும்.

சிறிய காப்பே ஆனாலும் பகைவரின் எழுச்சியை அழிக்கவல்ல தன்மை உடையது அரண்.

உறுபகை - வினைத் தொகை, உரிச்சொல் தொடரும் ஆகும்.

**5. கொளற்கு அரி தாய்க்கொண்ட கூழ்த்துஆகி அகத்தார்
நிலைக்கு எளிதாம் நீரது அரண்.**

கொளற்கு அரிதாய் - பகைவரால் கைக் கொள்ளப் படுவதற்கு அரிதாக; கொண்ட - தன்னகத்தே நிறைந்த; கூழ்த்து ஆகி - உணவுப் பொருள்களை உடையதாய்; அகத்தார் - உள்ளிருப்பவர்கள்; நிலைக்கு - நின்று போர் புரிவதற்கு; எளிதாம் நீரது அரண் - எளிதான தன்மை கொண்டது அரண் ஆகும்.

பகைவரால் கைக் கொள்ளப் படுவதற்கு அரிதாகவும் தன்னகத்தே நிறைந்த உணவுப் பொருள்களை உடையதாயும் உள்ளிருப்பவர்கள் நின்று போர்புரிவதற்கு எளிதான தன்மை கொண்டதாகவும் உள்ளது அரண் ஆகும்.

கூழ்த்து - இரண்டாம் வேற்றுமைத் தொகை.

**6. எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துஉதவும்**
**நல்லாள் உடையது அரண்.**

எல்லாப் பொருளும் - உள்ளிருப்பவர்களுக்கு உதவுகின்ற எல்லாப் பொருள்களும்; உடைத்தாய் - உடையதாய்; இடத்து உதவும் - வேண்டிய இடத்தில் உதவுகின்ற; நல்லாள் உடையது அரண் - நல்ல வீரர்களை உடையது அரண்.

உள்ளிருப்பவர்களுக்கு உதவுகின்ற எல்லாப் பொருள்களும் உடையதாய் வேண்டிய இடத்தில் உதவுகின்ற நல்ல வீரர்களை உடையது அரண் ஆகும்.

பொருளும் - முற்றும்மை

**7. முற்றியும் முற்றாது எறிந்தும் அறைப்படுத்தும்**
**பற்றற்கு அரியது அரண்.**

முற்றியும் - முற்றுகை இட்டும்; முற்றாது - முற்றுகையிடாது; எறிந்தும் - போர்புரிந்தும்; அறைப்படுத்தும் - அகத்தோரை வைத்துக் காத்தும்; பற்றற்கு - பகைவரால் பற்றுவதற்கு; அரியது அரண் - அரிதாக இருப்பது அரண்.

முற்றுகை இட்டும் முற்றுகை இடாது போர் புரிந்தும் அகத்தோரை உள்ளே வைத்துக் காத்தும் பகைவரால் பற்றுவதற்கு அரிதாக இருப்பது அரண் ஆகும்.

**8. முற்றுஆற்றி முற்றி யவரையும் பற்றுஆற்றிப்**
**பற்றியார் வெல்வது அரண்.**

முற்று ஆற்றி - முற்றுகையிட வல்லவராய்; முற்றியவரையும் - முற்றுகையிட்ட வரையும்; பற்று ஆற்றி - பற்றுக் கொண்டவராய்; பற்றியார் - உள்ளே பற்றியிருப்போர்; வெல்வது அரண் - போரிட்டு வெல்வதே அரண் ஆகும்.

உள்ளே பற்றியிருப்போர் பற்றுக் கொண்டவராய் முற்றுகையிட வல்லவராக முற்றுகையிட்டவரையும் போரிட்டு வெல்வதே அரணாகும்.

முற்றுகையிட்டோரைப் போரிட்டு வெல்லும் வலிமையைத் தருவது அரண் ஆகும்.

**9. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து**
**வீறுஎய்தி மாண்டது அரண்.**

முனைமுகத்து - போர்க்களத்தில்; மாற்றலர் சாய - பகைவர்கள்

அழியும் வண்ணம்; வினை முகத்து - போர்ச் செயல் ஆற்றும் போது; வீறு எய்தி - ஆற்றலும் சிறப்பும் அடைந்து; மாண்டது அரண் - பெருமையை உடையது அரண்.

போர்க்களத்தில் பகைவர்கள் அழியும் வண்ணம் போர்ச் செயல் ஆற்றும் போது ஆற்றலும் சிறப்பும் அடைந்து பெருமையை உடையது அரண் ஆகும்.

போர்ச் செயலுக்கு ஆற்றல் தரும் பெருமை உடையது அரண்.

**10. எனைமாட்சித்து ஆகியக் கண்ணும் வினைமாட்சி**
**இல்லார்கண் இல்லது அரண்.**

எனைமாட்சித்து ஆகியக் கண்ணும் - எவ்வளவு பெருமை உடையதாக இருப்பினும்; வினைமாட்சி - போர்வினையில் பெருமை; இல்லார்கண் - இல்லாதவரிடத்தில்; இல்லது அரண் - அரண் இல்லாதது ஆகும்.

அரண் எவ்வளவு பெருமை உடையதாக இருப்பினும் போர்வினையில் பெருமை இல்லாதவரிடத்தில் அந்த அரண் பெருமை இல்லாதது ஆகும்.

வலிமை இல்லாதார் கொண்ட அரண் பெருமை இல்லாததாகும்.

## பொருள் செயல் வகை

(பொருளைச் செய்தலின் திறன்)

**1. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருள்அல்லது இல்லை பொருள்.**

பொருள் அல்லவரை - பொருட்டாகக் கருதப்படாதவரை; பொருளாகச் செய்யும் – பொருட்டாகக் கருதப்படச் செய்கின்ற; பொருள் அல்லது – பொருளாகிய செல்வத்தைத் தவிர; இல்லை பொருள் – வேறு ஒரு பொருள் இல்லை.

பொருட்டாகக் கருதப்படாதவரைப் பொருட்டாகக் கருதப்படச் செய்கின்ற பொருளாகிய செல்வத்தைக் தவிர வேறு ஒரு பொருள் இல்லை.

ஒருவர் ஒருபொருட்டாகக் கருதப்படப் பொருளே காரணம்.

**2. இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை**
**எல்லாரும் செய்வர் சிறப்பு.**

இல்லாரை - செல்வம் இல்லாதவரை; எல்லாரும் எள்ளுவர் -

எல்லோரும் இகழ்வார்கள்; செல்வரை - செல்வம் உடையவரை; எல்லாரும் செய்வர் சிறப்பு - எல்லோரும் சிறப்பாகப் போற்றுவார்கள்.

செல்வம் இல்லாதவரை எல்லோரும் இகழ்வார்கள்; செல்வம் உடையவரை எல்லோரும் சிறப்பாகப் போற்றுவார்கள்.

எல்லாரும் - முற்றும்மை.

**3. பொருள் என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்**
**எண்ணிய தேயத்துச் சென்று.**

பொருள் என்னும் - செல்வம் எனப்படும்; பொய்யா விளக்கம் - பொய்க்காத விளக்கு; இருள் அறுக்கும் - துன்பமாகிய இருளை நீக்கும்; எண்ணிய - தான் நினைத்த; தேயத்துச் சென்று - நாட்டிற்குச் சென்று.

செல்வம் எனப்படும் பொய்க்காத விளக்கு அதனைக் கொண்டவர் நினைத்த நாட்டிற்குச் சென்று அவரது துன்பமாகிய இருளை நீக்கும்.

செல்வம் உடையவர் எங்கு சென்றாலும் அவரது துன்பத்தை நீக்குவது செல்வமாகிய விளக்காகும்.

**4. அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறன் அறிந்து**
**தீது இன்றி வந்த பொருள்.**

அறன் ஈனும் - அறச் செயலையும் தரும்; இன்பமும் ஈனும் - எல்லா வகையானும் இன்பத்தையும் தரும்; திறன் அறிந்து - ஆக்கும் திறன் அறிந்து; தீது இன்றி வந்த பொருள் - தீய வழியின்றி நல்ல வழியில் உண்டான பொருள்.

செல்வத்தை ஆக்கும் திறன் அறிந்து தீய வழியின்றி நல்ல வழியில் உண்டான பொருள் அறச் செயலையும் தரும்; எல்லா வகையானும் இன்பத்தையும் தரும்.

**5. அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்**
**புல்லார் புரள விடல்.**

அருளொடும் அன்பொடும் - அருளாலும் அன்பாலும்; வாராப் பொருளாக்கம் - வராத பொருள் ஆக்கத்தை; புல்லார் - பொருந்தாதவராய்; புரள விடல் - நீக்கி விட வேண்டும்.

அருளாலும் அன்பாலும் வராத பொருள் ஆக்கத்தைப் பொருந்தாதவராய் நீக்கிவிட வேண்டும்.

அருளாலும் அன்பாலும் வரும் செல்வத்தையே போற்ற வேண்டும்.

**6. உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்**
**தெறுபொருளும் வேந்தன் பொருள்.**

உறுபொருளும் - தானே சேர்ந்த பொருளும்; உல்கு பொருளும் - வரியினால் பெறப்படும் பொருளும்; ஒன்னார்த் தெறுபொருளும் - பகைவரை வென்றதால் அவரிடமிருந்து திறையாகப் பெற்ற பொருளும்; வேந்தன் பொருள் - வேந்தனுக்குரிய பொருள்களாகும்.

தானே சேர்ந்த பொருளும் வரியினால் பெறப்படும் பொருளும் பகைவரை வென்றதால் அவரிடமிருந்து திறையாகப் பெற்ற பொருளும் வேந்தனுக்குரிய பொருள்களாகும்.

**7. அருள் என்னும் அன்புஈன் குழவி பொருள் என்னும்**
**செல்வச் செவிலியால் உண்டு.**

அருள் என்னும் - அருள் என்று சொல்லப்படும்; அன்புஈன் குழவி - அன்பினால் ஈன்ற குழந்தை; பொருள் என்னும் - பொருள் என்று சொல்லப்படும்; செல்வச் செவிலியால் உண்டு - செல்வமாகிய செவிலித் தாயால் உளதாகும்.

அன்பினால் ஈன்ற அருள் என்று சொல்லப்படும் குழந்தை பொருள் என்று சொல்லப்படும் செல்வமாகிய செவிலித் தாயால் உளதாகும்.

அன்பின் குழந்தை அருள்; அது செல்வத்தால் உளதாகும்.

**8. குன்று ஏறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்து ஒன்று**
**உண்டாகச் செய்வான் வினை.**

குன்று ஏறி - மலையின் மேல் ஏறிநின்று; யானைப் போர் கண்டற்றால் - யானைப் போரைப் பார்ப்பது போல் ஆகும்; தன்கைத்து ஒன்று - தனது கையில் ஒரு பொருள்; உண்டாகச் செய்வான் வினை - சேர்ந்திருக்கும் படியாகச் செய்கின்றவனின் செயல்.

தனது கையில் ஒரு பொருள் சேர்ந்திருக்கும் படியாகச் செய்கின்றவனின் செயல் மலையின் மேல் ஏறிநின்று யானைப் போரைப் பார்ப்பது போல் ஆகும்.

மலையின் மேல் நின்று யானைப் போரைக் காண்பது பாதுகாப்பானது. அது போல் செல்வத்தை உண்டாக்குபவனின் செயல் அவனுக்குப் பாதுகாப்பாகும்.

**9. செய்க பொருளைச் செறுநர் செருக்கு அறுக்கும்**
**எஃகு அதனிற் கூரியது இல்.**

செய்க பொருளை - பயனுண்டாகுமாறு பொருளைச் செய்ய வேண்டும்; செறுநர் - பகைவர்; செருக்கு அறுக்கும் - அகந்தையை அறுக்கின்ற; எஃகு - கருவி; அதனிற் கூரியது இல் - அதைவிடக் கூர்மையானது இல்லை.

பயனுண்டாகுமாறு பொருளைச் சேர்க்க வேண்டும்; அந்தப் பொருளைவிடப் பகைவரின் அகந்தையை அறுக்கின்ற கூர்மையான கருவி வேறு இல்லை.

செய்க - வியங்கோள்

எஃகு - ஆகுபெயர்

**10. ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்**
**ஏனை இரண்டும் ஒருங்கு.**

ஒண் பொருள் - சிறந்த பொருளாகிய செல்வத்தை; காழ்ப்ப - முற்றிலுமாக; இயற்றியார்க்கு - சேர்த்தவர்களுக்கு; ஏனை இரண்டும் ஒருங்கு - மற்ற அறனும் இன்பமும் ஒருங்கே அமையும்.

சிறந்த பொருளாகிய செல்வத்தை முற்றிலுமாகச் சேர்த்தவர்களுக்கு மற்ற அறனும் இன்பமும் ஒருங்கே அமையும்.

அறனும் இன்பமும் மேற்குறளால் பெறப்பட்டது.

*(தொடரும்...)*



## திருவிளையாடற்புராணம்

### சமணரைக் கழு ஏற்றியது

சௌந்தர்ய பாண்டிமாதேவியான மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் திருஞான சம்பந்தரின் சேவடி வணங்கினர். எமது வேந்தனது கடுஞ்சுரத்தையும் கூனையும் ஒருங்கே போக்கியருளினீர்! மற்றுமொரு பெருங்குறை உள்ளது. அதையும் போக்கி யருள வேண்டும். பாண்டிய நாடு முழுவதும் சமணக்காடு மண்டி வளர்ந்துள்ளது. அதனையும் வெட்டிக்களைந்தருள வேண்டும் என்று பணிந்து வேண்டினர்.

திருவாலவாயுடையாரது திருவுள்ளக் குறிப்பை அறிந்து கொள்வோம் என்று மொழிந்து பாண்டிமா தேவியாரோடும் குலச்சிறையாரோடும் திருக்கோவிலை அடைந்தார். பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடிவிட்டுச் சோமசுந்தரப் பெருமானைத் தரிசித்துத் தாழ்ந்து வணங்கினார். ஆலவாய்ச் சொக்கநாதா! உடலை வருத்திக் கொண்டு வஞ்சகம் பெருகத் தவம் புரிந்து கொண்டு திரிகின்றார்கள் சமணர்கள். இம்மை மறுமைப் பயன்களையும், சதுர்வேதங்களையும், வேள்விகளையும் நிந்தனை செய்துழலுகின்றனர் சமணர்கள். அவர்களைத் தண்டிக்க எம்பெருமான் திருவுளம் புரிதல் வேண்டும் என்று பரிவுடன் வேண்டிக்கொண்டார். உடனே சோமசுந்தரப் பெருமானும் ஆகாசவாணியாக, அன்புடையீர்! உங்கள் கருத்துக்கு யாம் உடன்பாடு கொண்டுள்ளோம். நீங்களே வெற்றி பெறுவீர்கள், சமணர்கள் தோல்வி பெறத் தகுந்தவர். ஆகையால், நீங்கள் பாண்டியன் சபையை அடைந்து சமணர்களை அழைத்து வாதம் புரியுங்கள். அவர்கள் தோல்வியடைவார்கள். அதன் விளைவாக கழுவில் ஏறி இறந்துவிடுவார்கள் என்று மொழிந்தருளினார். அதனைக் கேட்ட திருஞான சம்பந்தர் தமது திருமடத்திற்கு எழுந்தருளினார். மங்கையர்க் கரசியாரும் மந்திரியாரும் தங்கள் தங்கள் மனை சேர்ந்தனர்.

மறுதினம் விடிந்ததும் பாண்டிமாதேவியாரும் பேரமைச்சரும் திருமடம் சேர்ந்து சமணரை வெல்வதற்கான வழிதுறைகளை ஆராய்வாராயினர். பின்பு திருஞானசம்பந்தரை வணங்கி அவரைப் பாண்டியன் சபைக்கு அழைத்துச் சென்றனர். பின்னர் வேந்தனை

நோக்கிப் பணிந்து, செங்கோல் வேந்தே! நமது பாண்டிய நாடு முழுவதும் கறுத்த சமணக்காடு மண்டிவளர்ந்துள்ளது; அந்தக் காட்டு மரங்களை வேரோடு தூரோடு களைந்தெறிந்து திருத்த வேண்டும். அப்போது தான் சைவப் பயிர் தழைத்தோங்கி வளரும் என்று கூறினர். அதைக்கேட்ட அரசனும் அனுமதி வழங்கினான். பாண்டிய நாடு உய்ய வேண்டிய உரிய காலம் இதுவே என்று சோமசுந்தரப் பெருமான் திருவருளைச் சிந்தித்தவாறு ஆங்கே இருந்தருளினார் சம்பந்தர்.

சமணர்கள் தங்கள் இல்லத்திலே இடியுண்டனர். அவர்களுடைய மனைவியரும் மக்களும் கோபத்துடனே நோக்கி, பாண்டியனது சுரத்தைப் போக்க ஆற்ற மாட்டாது ஒரு சிறு பிள்ளையிடம் தோற்றுப்போனீர்களே! அதனாலே அருகக்கடவுளடியார் அனைவருக்குமே பழியை உண்டாக்கி விட்டீர்களே! பாண்டியனும் சாம் பற்பூச்சுச் சமயத்திலே சேர்ந்துகொண்டு பாம்பணி கடவுளைப் பணியத் தொடங்கிவிட்டான். சமண சமயத்தை அவமதித்துக் கைவிட்டான் என்று இடித்துரைத்தனர். அவர்கள் சொல்லியதையும் கேட்டுக் கொண்டு சமணர்கள் சீகாழிப்பிள்ளையுடன் வாதம்செய்யக் கிளம்பினர். அவர்களது மனைவிமார்களோ நீங்கள் ஏற்கனவே பெற்ற வெற்றி! போதும், போக வேண்டாம் என்று தடுத்துப் பார்த்தனர். தாங்கள் கண்ட தீக்கனவைப் பற்றிச் சொன்னார்கள். என்னவெல்லாமோ சொல்லித் தடுத்து நிறுத்தப் பார்த்தனர். மீறிச்சென்ற கணவன்மார்களைச் சபித்தும் பார்த்தனர். அழிவுக் காலத்தை நெருங்கிய சமணர்கள் எதையுமே பொருட்படுத்தாது துணிந்து சென்றனர். இடையிலே எத்தனையோ பொல்லாச் சகுனங்கள் தோன்றி மறித்தன. எதையும் அலட்சியம் செய்த சமணர்கள் நகர்ப்புறத்திலே சென்று ஓரிடத்தில் கூடினர். வெல்லும் வழி பற்றிச் சிந்தித்தனர். பாண்டிய மன்னைக் கண்டு சொல்லி அவனது உத்தரவு பெற்றுப் பகைவனை வாதினால் வெல்வோம் என்று தமக்குள் முடித்துக்கொண்டனர். பின்னர் ராஜசபையை நோக்கிச் செல்வாராயினர். அதுசமயம் திருஞானசம்பந்தரும் சோமசுந்தரப்பெருமானைத் தரிசித்து வணங்கிவிட்டுத் திருமடம் வந்து கொண்டிருந்தார். சமணர்கள் அவரை இடைமறித்து நிறுத்தித் திருப்பினர். சமணர்கள் பின்தொடர சீகாழிப் பிள்ளையார் பாண்டிய சபையை அடைந்தார்.

பாண்டியன் காட்டிய அரியணை மீதேறி பாலசூரியனைப் போல் அருளொளி வீசிய வண்ணம் அமர்ந்தார்.

சிறந்த ராஜ மரியாதை பெற்ற திருஞான சம்பந்தரைக் கண்ட சமணர்களுக்குப் பொறுக்க முடியவில்லை. ஆதலால் பிள்ளையாரை நோக்கி, அவரையும் ஒரு சிறுபிள்ளையாகவே மதித்து, மழலை மொழி மாறாப் பாலகனே! காக்கையேறப் பனம்பழம் விழுந்ததுபோலத் தான் உன் கதை. நீ அவ்வளவுக்கு மந்திரசக்தி படைத்தவனா? நீ கர்வம் கொள்ள வேண்டாம். நீ சிந்திய சாம்பலும் சொன்ன சிறு சொற்களும் மருந்தும் மந்திரமுமாக ஆகுமா? என்னவோ பாண்டியன் நோய் தீர்ந்து விட்டது. ஆதலால், உங்களது மந்திரத்தை ஒரு பனை ஓலையிலே எழுதுங்கள். மற்றொரு பனை ஓலையிலே எமது மந்திரத்தை எழுதுகிறோம். இந்த இரண்டு ஏடுகளையும் நெருப்பிலே போடுவோம். வெந்த ஏடு தோல்வியுற்றது என்றும் வேகாத ஏடு வெற்றியுற்றது என்றும் முடிவு கொள்வோம். இந்த வாதத்தை சிவபதிகளில் செய்யலாகாது; ஏனெனில், அவனும் நடுநிலைதவறி எமக்குக் கேடு செய்யலாம்; ஆதலால் ஊர்ப்புறத்தே சென்று வாதம் செய்வோம் என்று சொல்லிவாதுக்கு அழைத்தார்கள். திருஞான சம்பந்தரும் சௌந்தர்ய பாண்டியனும் ஒப்புக்கொண்டனர்.

சமணர்கள் முன்னே சென்றனர். மதுரைக்குக் கிழக்கே சென்று ஒரு பெரிய குழி வெட்டித் தீ மூட்டினர். தீ மூட்டிக்கொண்டே திருஞானசம்பந்தரை இழித்துப் பேசிக்கொண்டிருந்தனர். அப்போது சிவனடியார் பதினாறாயிரம் பேர்கள் சூழந்துவர சிவஞானமுண்ட பிள்ளையும் அங்கே வந்து எழுந்தருளினார். மாறனும், பாண்டிமாதேவியும் பிரதம மந்திரியும் அவர் பின்னே சென்றனர்.

தாங்கள் முயன்று பயின்ற பல்வேறு மந்திரங்களை யெல்லாம் பச்சையேடுகளிலே எழுதி ஒருங்கே சென்று அவற்றையெல்லாம் தீயில் இட்டார்கள் சமணர்கள் எட்டாயிரம் பேர்களும். அந்த ஏடுகள் எல்லாம் தீப்பற்றி எரிந்து சாம்பலாகி ஒழிந்தன. அதுகண்ட சமணர்கள் மனம் புழுங்கினர். சுற்றியிருந்தோர் சிரித்தனர்.

திருஞானசம்பந்தர் தாம் பாடியருளிய தமிழ்மறைத் திருமுறைச் சுவடியை எடுத்துக் கயிறு இட்டுப் பார்த்தார். தாம் அன்று அருந்துமாறு

சிவஞானப்பால் அருளிய உமையம்மையின் திருநாமம் உடைய போகமார்ந்த பூண் முலையாள் என்ற பாடல்ஏடு கிடைத்தது. அதனையே எடுத்துத் தீயில் இட்டார். அத்திருத் தேவார ஏடு தீயினிடையே பசுமையாகவே இருந்தது. மாறனும், தேவியாரும், மந்திரியாரும் அங்கு கூடியிருந்த ஏனையோரும் வியந்து மகிழ்ந்தனர். திருஞான சம்பந்தரைப் புகழ்ந்து பாராட்டி அளவிலாத இன்பமடைந்தனர். பின்னர் பிள்ளையாரும் தாம் நெருப்பிலிட்ட ஏட்டினைத் திரும்ப எடுத்துத் தமது சுவடியிலே வைத்துக் கட்டியவாறே பாண்டியனைப் பார்த்தார்.

சமணர்கள் சத்தியத்தையும் நாணத்தையும் ஒருங்கே கைவிட்டனர். அங்கு குழுமியிருந்தோர் சிரித்ததனால் அவர்களுக்குப் பொறுமை இழந்து பட்டது. பேராரவாரம் செய்துகொண்டு மறுபடியும் காழிப் பிள்ளையாரைப் பார்த்து, எங்கள் மந்திரம் எழுதப்பட்ட எட்டாயிரம் பச்சை ஏடுகளும் எரிந்துவிடாமல் அப்படியே இருந்தது. நீர் அக்கினியை கட்டி ஏதோ மாயம் செய்து விட்டீர். ஆதலால் உமது ஏட்டையும் எங்கள் ஏடுகளையும் வையை நதியின் நீரிலே இடுவோம், எவர் ஏடு எதிர்த்துச் செல்கிறதோ அவர் வெற்றி பெற்றவராவர். வெற்றி பெற்றவருக்குத் தோல்வி கண்டவர் என்றென்றும் குற்றேவல் புரிந்துகொண்டிருக்க வேண்டும். என்று கூறினார்கள். அதைக் கேட்ட திருஞானசம்பந்தர், குற்றேவல் செய்யும் அடியார்கள் நமக்குப் பதினாயிரம் பேர்கள் உள்ளனர்; அவர்களே போதுமானவர். சிவபெருமானை இகழ்ந்த கொடியவர்களாகையால் உங்களுக்குத் தகுந்த தண்டனை இதுவல்ல. சிவபெருமான் திருவருளால் யாம் வெற்றியடைந் தோமானால் உங்களையெல்லாம் கழுவில் ஏற்றுவோம், என்று கூறினார். சமணர்கள் அதற்கு ஒப்புக் கொண்டனர்.

அதனையறிந்த அமைச்சர் குலச்சிறையார் பல தச்சர்களை வரவழைத்து நீண்ட மரங்களில் சூல வடிவமான கழுக்களைச் செய்து அவற்றையெல்லாம் கொணர்ந்து மன்னவன் முன் வைத்தார். சீகாழிப் பெருமான் சமணர்களைப் பார்த்து, இப்பொழுதாயினும் நீங்கள் வாதம் புரிவதை விட்டுவிடுங்கள். விபூதி ருத்ராக்ஷம் அணிந்து பஞ்சாக்ஷரத்தை ஓதி பாசம் ஒழிந்து உய்யுமாறு காணுங்கள் என்று நன்னெறி நவின்றருளினார்.

அதைக் கேட்ட சமணர்கள் எரிகின்ற நெருப்பைப் போலப் பொங்கி எழுந்தனர். அனல் வாதத்திலே ஏதோ நீர் வெற்றியடைந்ததாலே புனல் வாதத்திலேயும் வென்றுவிட முடியும் என்ற எண்ணமோ? இந்த வாதத்திலிருந்து தப்பிச் செல்ல விரும்பி இவ்வாறு எம்மிடம் பரிவு காட்டுபவர் போல இணங்கிப் பேசுகிறீர்போலும்! எங்களோடு வாதம் செய்யத் துணியவில்லையே? வாதம் புரிய வாரும் என்று கடுமொழி கூறினார்கள்.

வேகவதியாகச் செல்லும் வையையாற்று நீர்ப் பெருக்கைத் தமது மந்திர சக்தியால் மட்டுப்படுத்தினர் சமணர்கள். தங்கள் தங்கள் ஏடுகளை முன்போலவே மந்திரங்கள் எழுதி ஆற்று நீரிலே போட்டனர். திருஞான சம்பந்தரும் வேதங்கள் மொழிவது சத்தியவாணியானால், வேதங்கள் துணிந்து இயம்பும் சத்தியவஸ்து சிவபெருமானே என்பது உண்மையானால், இந்த ஏடு ஆற்று நீர்ப்பெருக்கை எதிர்த்துச் செல்க, என்று இயம்பி வாழ்க அந்தணர் என்ற திருப்பாடலை ஏட்டிலே எழுதி நீரில் இட்டார். சோமசுந்தரப் பெருமானது திருவருளாலே இழுக்கப் பெற்ற திருஞான சம்பந்த ஏடு ஆற்றுநீரை எதிர்த்துச் சென்றது! சமணர் எண்ணாயிரவர் விடுத்த ஏடுகள் எல்லாம் ஆற்று நீரோடு போயின. பரசமயக் கோளரி திருஞானசம்பந்தர் விடுத்த ஏடு ஆற்றுப் போக்கை எதிர்த்து ஏறக்கண்ட தேவர்கள் பூமழை பொழிந்தனர். சிவனடியார்கள் ஆரவாரம் செய்து மகிழ்ச்சி தெரிவித்தனர். தோல்வியே கண்ட சமணர்கள் உடல் வியர்த்து நடுநடுங்கி வெட்கமடைந்து நின்றனர்.

சிவபெருமானே தேவர்கள் அனைவருக்கும் போகத்தையும் மோக்ஷத்தையும் தந்தருளவல்ல முழுமுதல் என்ற நித்தியமான சத்தியத்தை அனல்வாத மூலமாகவும் புனல்வாத மூலமாகவும் குருமுக உபதேசம் நிகர்த்து மிகத் தெளிவாகப் பாண்டியன் உணர்ந்தான். சௌந்தர்ய பாண்டியனும், மாதேவி மங்கையர்க்கரசி யாரும், மந்திரி குலச்சிறையார் மற்றுமுள்ள சிவனடியார்களும் திருஞானசம்பந்தரை வணங்கித் துதித்தனர்.

சமணர்களில் சிலர் தங்கள் மானத்தை இழந்தவர்களாகி, காழிப் பிள்ளையார் திருமுன் வந்து யாம் தோற்றோம்; நீர் ஜயம்பெற்றீர்! என்று ஒப்புத் தெரிவித்தனர். உடனே திருஞான சம்பந்தர் அங்கு தோல்வி

கண்டு நின்ற அத்தனை சமணர்களையும் விளித்து, சிவபெருமான் ஜீவராசிகளுக்கெல்லாம் தாய்போன்றவன்; அவனுக்கு ஆளாகி உய்யுங்கள்! ஏன் வீணே சாகின்றீர்கள் என்று மொழிந்தருளினார். மானம் பொறுக்கமாட்டாத சில சமணர்கள் சினந்து, சிறுவனே! நீ கூறுவது தகாத மொழி, என்று சொல்லிவிட்டுத் தாங்களாகவே கழுவிலே ஏறத் தொடங்கினார்கள். சமயப் பற்றுக்கொண்ட சமணர்கள் தாமே வலுவில்வந்து கழுமரம் ஏறினர். ஏறாத சமணர்களைச் சைவக்கோலம் புனைந்தவர் துன்புறுத்தி ஏற்றி வைத்தனர். சாவுக்கு அஞ்சியவர் விபூதி பூசிக் கொண்டனர்.

பாண்டிய வேந்தன் திருஞானசம்பந்தரை வணங்கி நின்றான். தேவரீர்! ஆற்றிலே விடுத்த ஏடு நீர்ப் போக்கை எதிர்த்துச் சென்றதே! அது எங்கு சென்றதோ? என்று பரிவுடன் வினாவினான். ஆலவாய் எம்பிரானருளால் அதனை இப்போதே வரவழைப்போம் என்று மொழிந்தருளி ஆற்றங்கரை வழியே மேற்கு நோக்கிச் சென்றார். ஏனையோரும் பிள்ளையாரைத் தொடர்ந்து சென்றனர். ஏடு ஒரு காத தூரம் எதிர்த்துச் சென்று பின்னர் திடீரென மறைந்துவிட்டது. ஏடு மாயமாக மறைந்தது கண்ட அனைவரும் ஆச்சரியமடைந்தனர். ஆயர் சிறுவரைக் கண்டு அவ்விடத்து விசேஷம் பற்றிக் கேட்டனர். அவர்கட்கு ஏதும் தெரியவில்லை. ஆனால் விசேஷம் இருக்க வேண்டுமென்ற சம்பந்தப் பெருமான் சிவபெருமானை நினைந்து வன்னியும் மத்தமும் என்று தொடங்கும் திருப்பதிகம் பாடியருளினார். அப்போது ஆங்கொரு பெரிய வில்வமரத்தினடியிலே சிவபெருமான் சுயம்புலிங்கமாகத் தோன்றிக் காட்சி தந்தருளினார். காழிப் பிள்ளையார் சிவலிங்கத்தைத் தரிசனம் செய்து பணிந்து வலம் வந்து நின்றார். அது சமயம் லிங்கத்திலிருந்து வயது முதிர்ந்த அந்தணர் ஒருவர் வெளிப்பட்டு நின்றார். பிள்ளையாரைப் பார்த்து நீ எனது இளைய குமாரனைப்போல இருக்கிறாய் என்று மகிழ்ந்து கூறித் திருநீறு இட்டார். சிவஞானத்தைத் தமக்கருளிய இறையவரே அவர் என்று கருதிய ஞானசம்பந்தர் அவரை வணங்கி, பெரியவரே! எளியேனது ஏட்டைத் தந்தருள வேண்டும் என்று வேண்டினர். முதிய பெருமானும், குமார! எம்மைத் தலங்கள் தோறும் சென்று பாடுவாய்; இழி நெறிபற்றி ஒழுகுபவரைத் தெருட்டி வெற்றிகொள்வாய்; பின்பு எம்முடைய சுத்தமான

மோக்ஷத்தைப் பெறுவாயாக என்று மொழிந்தருளி ஏட்டைத் தந்து மின்னலை நிகர்த்து மறைந்தருளினர். திருஞானசம்பந்தரின் பெருமையை நன்குணர்ந்த பாண்டியன் அவரை வணங்கினான். பாண்டியன் பின்பு அங்கே எழுந்தருளிய சிவபெருமானுக்குப் பொற்கோவிலும் திருமண்டபமும், திருக்கோபுரமும், திருமதிலும், திருவீதியும் கண்டோர் களிக்குமாறு அமைத்தான். அன்று முதல் அத்திருப்பதி திருவேடகம் என்னும் திருப்பெயர் கொண்டு விளங்குவதாயிற்று. சமணரோடு இணங்கிய தனது பாவமெல்லாம் போகுமாறு அப்பதியிலுள்ள சிவபெருமானைப் பூசித்து மும்மல நீக்கம் பெற்றான். பின்பு பாண்டியன் அங்கேயே திருநகரம் ஒன்று அமைத்து ஒருவருஷ காலம் திருஞான சம்பந்தருடன் அங்கேயே தங்கியிருந்தான்.

பின்னர் பாண்டியன் திருஞான சம்பந்தரோடு மதுரை சேர்ந்தான். சிவஞான குமாரர் பாண்டி நாடெங்கும் சென்று விபூதிச் செல்வம் விளக்கமுறச் செய்தார். சில நாட்கள் மதுரையிலே தங்கியிருந்து பின்பு வடநாட்டிலுள்ள க்ஷேத்திரங்களைத் தரிசிக்க விரும்பினார் காழிப் பிள்ளையார். திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானையும் மீனாட்சியம்மையாரையும் தரிசனம் செய்து பல வரங்கள் பெற்றுப் புறப்பட்டார். சௌந்தர்ய மாறனும் மங்கையர்க்கரசியாரும் குலச் சிறையாரும் பிரியா விடை தந்தனுப்பினர்.

பல பாண்டிய நாட்டுச் சிவஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டே சோழ நாடு சென்றார் திருஞான சம்பந்தப் பிள்ளையார்.

*(தொடரும்...)*

---

## மடாலய நிகழ்வுகள்

25.06.2022 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் "உண்டால் அம்ம இவ்வுலகம்" என்னும் தலைப்பில் பேராசிரியர் முனைவர் மு.பழனி இராகுலதாசன் சொற்பொழிவாற்றினார்.

---

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

## பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)
- M.A.Tamil

**B.Sc. Visual Communication.,**

(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

**திரைக்கதை, வசனம் எழுதுதல்,**
**ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,**
**இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்**
**போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!**